# இணைய மனிதன் 1.0

## காதல் முதல் கணினி வரை

*ரகுபதி*

# Contents

*1*

# *நிலவும் அவளும் - அவள் விழி பேசும் மொழி*

*அவளின் விழி பேசும் மொழி — இங்கு மொழிபெயர்ப்புடன் ...*

***கருத்துப்பிழை இல்லா எழுத்துப்பிழை***

*முன்னுரை கொண்ட ஓவியம் நீ,*

*முடிவில்லா சிறுகதை நீ,*

*சுமையில்லா எடையும் நீ,*

*எதிரில் வரும் எதுகையும் நீ,*

*என் விரல் தீண்டா வீணையும் நீ,*

*எந்தன் முழு பாதியும் நீ.*

***முதல் பதிப்பு***

*முதல் பதிப்பில் முற்றுப்பெற்ற காவியம் நீ,*

*என்னுள் ஏற்படும் உன் ஒவ்வொரு பாதிப்பிலும் மறுபதிப்பு பெற்று உன்னை தொடர்ந்து வரும் தொடர்கதை நான்.*

***என் விழி வரைந்த ஓவியம் நீ***

*இமையை தூரிகையாக்கி,*

*இதயத்தை காகிகதமாக்கி,*

*எண்ண கற்பனையை வண்ண கலவையாக்கி,*

*என் கண்கள் வரைந்த எண்ண ஓவியத்தின் பிரதிபலிப்பு நீ.*

***தள்ளிப்போகாதே***

*என்னை பிரிந்து சென்று இந்த உலகம் பெரிதென்று காட்டாதே,*

*கடிகார முள்ளை பட்டை தீட்டி என்னிடம் நீட்டாதே,*

*நீ இன்றி செல்லும் நொடிகள் என்னை கொல்லுதடி,*

*உன் நினைவுகளே என்னை வெல்லுதடி.*

***ஆக்கிரமிப்பு***

*நெருங்கி வருகையில் நொருங்கி போனதே,*

*சுருக்கி/ சுருங்கி விரியும் இதயமும் சுற்றளவை பெருக்கி விரியுதே,*

*உன் விழி ஈர்ப்பு விசையால் என் பூமத்திய ரேகைக்கு புது மத்தியம் கொடு தாயே.*

***கானல் கனவுகள்***

*என் காதல் கனவுகள் எப்பொழுதும் கானல் கனவுகள் — என்னால் மட்டுமே உணர முடிவதால்.*

***ஒரு தலை ராகம்***

*நீ தொலைத்து செல்லும் நினைவுகளையும் சேர்த்து சுமக்கிறேன் நான்,*

*அதனால் தான் என்னவோ வழி எங்கும் எனக்கு மட்டுமே வலிகள்.*

***நாட்குறிப்பில் அடையாளம்***

*நாட்குறிப்பின் நடுவில் இருக்கும் மயிலிறகைப்போல உன் நினைவுகள்,*

*அழகான அடையாளமாக இருக்கிறது என் குறிப்பில்.*

***வளைகுடா காதல் பயணம்***

*வளைகுடா கடல் பயணம் கள்வர்களால் ஆபத்தானது தான் ஆனால் உன் கடை*

*விழியை கடக்கும் ஆபத்தில் ஒப்பிட்டால் அது பத்தில் ஒரு பகுதியே இல்லை.*

***இரட்டை ஆயுள் தண்டனை***

*மின் கடத்தியான என்னை மின்னல் வேகத்தில் கடத்தியதால் உனக்கு இரட்டை ஆயுள் தண்டனை என் ஆயுளையும் சேர்த்து.*

***சாய்ந்த கோபுரம்***

*உன்னை தலை சாய்த்து பார்க்கும் போது தலை சுற்றிப்போனது சாய்ந்த கோபுரம்.*

***புள்ளி இல்லா கோலம்***

*அலங்கோலமான என் கை எழுத்தும் அழகான கோலமானது உன் பெயரை எழுதும் போது.*

***அடை மழையும் அவள் நினைவும்***

*அடை மழையும் அவள் நினைவும் ஒன்று தான்,*

*வரும் பொழுதெல்லாம் என்னையும் கண்ணையும் சிறிது நனைத்து விட்டுத்தான் செல்கிறது.*

***வா(சூ)டிய பூக்கள்***

*நீ சூடும் பூக்களும் வாடிப் போகிறது உன் முகத்தை காண முடியாததால்.*

***கண்கள்***

*கண்கள் — காதலும் காதல் சார்ந்த இடமும்.*

*நாம் சேர்ந்து இருக்கும் போது சோர்ந்து போவது இமைகள் மட்டுமே.*

*இமை கூட சுமை தான்,இவளுடன் இருக்கும் போது.*

**எனக்கு பிடித்த வரிகள்**

*நான் எழுதிய வரிகள்,*

*திரும்ப திரும்ப படிக்கிறேன் உனக்கது பிடித்துப்போனதால்.*

**விழி**

*உன்னை பார்க்கும் போது,*

*என் கருவிழியும் கலர் விழியாய் மாறுதடி.*

**"நீ" யாக**

*வள்ளுவர் அதிகம் பயன்படுத்திய எழுத்து "னி",*

*இதுவே நான் திருக்குறள் எழுதி இருந்திருந்தால் அதிகம் பயன்படுத்திய எழுத்து "நீ" யாக இருந்திருப்பாய்.*

**தனி ஒருவன்**

*எங்கு பார்த்தாலும் இருவர்களாய் இருக்க,*

*ஒற்றையாகவும் இருக்கலாம் என்பதற்க்கு அடையாளமாக நான்.*

**புதுமைப்பெண்**

*பாரதியார் மட்டும் உன்னை பார்த்திருந்தால்,*

*பார் "ரதி" யார் என்று வினவி இருப்பார்.*

**அடைமழை**

*யார் மேல் கொண்ட கோபத்தினாலோ சினுங்குகிறது வானம்*

*2*

# *கிராமம் – சாயம் போகும் விவசாயம்*

***தண்ணீர் பற்றாக்குறை***

*சற்று காரமாக சமைக்கும் போது அம்மாவிடம் ஒவ்வொரு முறையும் எச்சரிக்கிறேன்,*

*நாட்டில் தண்ணீர் பற்றாக்குறைக்கு நீங்களும் ஒரு காரணம் என்று.*

***சிகப்பு கம்பள வரவேற்பு***

*எந்த ஊருக்கு போகனும்னு கேக்காம எப்போ தம்பி ஊருல இருந்து வந்தனு கேக்குற பேருந்து நடத்துனர்,*

*எப்போதாவது ஒரு நாள் ஊருக்கு வரும் என்னை எப்போதும் பார்க்க வரும் எவர்கிரீன் பேரழகிகள்(பெரும் கிழவிகள்),*

*என் தோட்டத்தில் இருக்கும் எட்டாத அறிவு கொண்ட குழந்தைகளின் எல்லையற்ற தொல்லைகள்,*

*கண்களில் வம்பு செய்ய காற்றில் கலந்து காத்திற்க்கும் செம்மண்,*

*இவர்களை விடவா சிகப்பு கம்பள வரவேற்பு சிறந்த்தாக இருந்து விட போகிறது!!!*

***முதுகு வலி வந்த இந்தியாவின் முதுகெழும்பு விவசாயம்***

*வயதாகிப்போன இந்திய அரசியலமைப்பில்*

*அதிகம் தொய்ந்து போனது முதுகெலும்பு — விவசாயம்.*

***அகம் சாட்சி ஆகிறது***

*அருங்காட்சியகம் செல்லாமலே இவன் அகம் காட்சி ஆகிறது — இவனது வருமான சான்றுக்கு இதுவே சாட்சி ஆகிறது*

*3*

# *கார்ப்ரேட் கடுப்புகள் - கனவுகளின் கண்ணாடி கல்லறைகள்*

***கணிப்பொறி கலைஞன்***

*உணர்வில்லா உன்னுடன் ஓர் உணர்ச்சி போராட்டம்*

*-இப்படிக்கு பொறியி(யலி)ல் சிக்கிய கணிப்பொறி கலைஞன்.*

***கண்ணாடி கட்டிடம்***

*கண்ணாடி கட்டிடத்தின் பளபளப்பிற்கு காரணம் துடைக்கப்படும் தண்ணீர் மட்டும், அல்ல அங்கு வேலை பார்ப்பவர்களின் கண்ணீராகவும் இருக்கலாம்.*

***புதிராகிப்போனேன்***

*எனக்கு மட்டும் விரைவாக விடியும் காலை,*

*வெளிச்சமான இரவு,*

*இருள் சூழ்ந்த சூரியன்,*

*வாடிக்கைக்கு எதிர் திசையில் என் பயணம்,*

*அயல் நாட்டு நேரம் காட்டும் என் கடிகாரம்.*

*கண்டு பிடித்தீர்களா என்னை ?*

*ஆம் நான் தொலைந்து போன கார்ப்ரேட் கவி(லை)ஞன்.*

4

# நுட்பம் மறந்த தொழில் நுட்பம்

### தொப்புள் கொடி

*தொப்புள் கொடி இன்றி பிறக்கும் குழந்தைகள்,*

*வியந்து போய் கேட்டால் wireless technology என்கிறார்கள்.*

### உணர்வு தானம்

*உயிரோடிருக்கும் போதே உணர்வு தானம் செய்து கொண்டிருக்கிறோம்*

*— Artificial intelligence.*

### *Headphone*

*இன்றைய மக்கள் கேட்பது என் பேச்சை மட்டுமே — Headphone.*

### இசை பேசி

*ஊமை ஆகிப்போன உணர்வுகளுக்கு வார்த்தை கொடுக்கிறது இசையால் — இசை பேசி.*

### அறிவாளி தனமான முட்டாள் அல்லது முட்டாள் தனமான அறிவாளி

*அவன் கட்டுப்பாட்டில் வளர்ந்த கண்டுபிடிப்புகளில் கட்டுண்டு போனான் மனிதன்.*

*கடிகாரம் நமக்கு நேரத்தை மட்டும் காட்டவில்லை,*

*நமக்கான நேரத்தை நிர்ணயம் செய்கிறது!!!*

***Encrypt* செய்யப்பட்டஉணர்வுகள்**

*Encrypt செய்யப்பட்ட உணர்வுகளாக smileys-களும் emoji-களும் இன்று மா(ற்)றிக்கொண்டிருக்கிறது.*

***இரும்பு இளைஞன்***

*உரு மாறும் உடலுடன்,*

*உயிரூட்டப்பட்ட உணர்வுடன்,*

*நீர் கொண்ட நினைவுகளைப் போல நீர்த்துப் போகாத நினைவலைகளுடன்,*

*இரவு பகல் பாராத இரக்கமற்ற இயக்கத்துடன்*

*இறக்குமதி செய்யப்பட போகிறான் இரும்பு இளைஞன்*

*இருபத்தி இரண்டாம் நூற்றாண்டில்.*

***'செல்'லப் பிராணிகள்***

*தடவி கொடுத்து தூங்க வைக்கும் 'செல்'லப்பிராணியாக செல் பேசிகள்,*

*அடம் பிடிக்கும் குழந்தை போல கரம் பிடித்தே கிடக்கிறது.*

***இன்றைய மனிதன் — ஓர் அறிமுகம்***

*இயந்திர மனிதன்,*

*இணைய வாசி,*

*ஒற்றை தாளில் பணம்,*

*தொலை தூர தொடர்புகள்,*

*தொடுதிரையில் மட்டும் உணர்வுகள்,*

*தொட்டுப்பார்க்காத உணவுகள்,*

*வாசனை வார்த்தைகளாக உறவுகள்,*

*ஐவிரல் இடுக்கில் சிக்கிக்கொண்ட அவன் உலகம்,*

*இருந்தும் தொலைநோக்கி கொண்டு தொடர்கிறான் (தொலைக்கிறான்) வாழ்க்கையை.*

### *தொடு திரை*

*இன்றைய உலகில் உணர்வுகளுக்கு அதிக முக்கியத்துவம் தரப்படும் இடம் — தொடு திரை.*

### *Offline*

*இணையவாசிகளின் தலைமறைவு வாழ்க்கை — OFFLINE.*

### *புகைப்படம்*

*இது உருவங்களை மட்டுமல்ல சில நேரங்களில் உணர்வுகளையும் பதித்து விடுகிறது — புகைப்படம்.*

*5*

# *நகரம் – நரகமயமாக்கல்*

***அடுக்கு மாடி கட்டிடங்கள்***

*அடுக்கு மாடி கட்டிடங்கள்—ஆனால் இங்கு அடுக்கப்படுவது மாடிகள் அல்ல வீடுகள் மட்டுமே,*

*இதில் பெரிதும் இருப்பது கருத்துப்பிழை அல்ல கட்டிட பிழை மட்டுமே.*

***நிலத்தின் நிலையாமை***

*அன்று நான் விலைமதிப்பற்ற விளை நிலம்,*

*நேற்று நான் விதியற்ற விளையாட்டு நிலம்,*

*இன்று நான் விலை போன வீட்டு மனை நிலம்.*

*மறுசுழற்சி மண்ணிற்கு வேண்டாம்,மனிதனுக்கு தான் வேண்டும்.*

***நகர வாழ்க்கையின் நிலையாமை***

*நகரும் நட்சத்திரங்களாய் வானூர்திகள்,*

*நகர வாழ்க்கையின் நிலையாமை.*

***இன்றைய மனிதர்கள்***

*வண்ண விளக்குகளை நோக்கி செல்லும் விட்டில் பூச்சிகள்—மனிதர்கள்.*

*6*

# *பயணங்கள் முடிவதில்லை - நினைவுகளில்*

***பயணம்***

*கடந்து வந்த பயணங்கள்,*

*கறைந்து செல்லும் காட்சிகள்,*

*உறைந்து விட்ட உணர்வுகள் இவற்றுடன் ஊடுருவிச் செல்கிறது என் பயணம்,*

*இந்த பயணத்தில் சுழன்றது கனரக கால் சக்கரம் மட்டுமல்ல என் கனவு சக்கரமும் தான்.*

***வான் வெளியில் ஒரு கடல் பயணம்***

*ஐந்து முறை அலாரம் வைத்து,*

*அந்த ஐந்திற்க்கும் முன் எழுந்து அதை அணைத்து பரபரப்பாக கிளம்பிய பறக்கும் பயணம்,*

*பயம் கலந்த முதல் காதல் மட்டுமல்ல பயம் கலந்த முதல் பயணமும் மறக்க முடியாது இதை யாரும் மறுக்க முடியாது.*

*வான் பயணத்தில் சுவாசிக்க ஆக்சிசன் வறட்சி வரும் என்று வரும்முன் சொன்னவர்களால்,*

*பயணத்தை கவிதையாக வாசிக்க வார்த்தைகளுக்கும் வறட்சி வரும் என சொல்ல மறந்தது ஏனோ?*

*உவமைகளாக கேட்ட அனைத்தையும் உருவமாக உணர்கிறேன்,*

*உயர்ந்த மனதுடன் உயர்ந்த இடத்தில் இருந்து உணர்ந்தவை இவை.*

7

# *உதிரிப் பூக்கள் - இலவச இணைப்பாக*

***விநாயகர் சிலை***

*விற்பவன் சிலையை கல்லாகவும் வாங்குபவனை கடவுளாகவும் பார்க்கிறான்,*

*வாங்குபவன் கல்லை சிலையாகவும் விற்பவனை கல்லாகவும் பார்க்கிறான்.*

***படி***

*படிகள் ஏறினால் தான் கடவுளை பார்க்க முடியும் என்று இருந்தேன்,*

*சிலரை படிக்கும் வரை.*

***கதை***

*என்னவளுக்கோ என் பேச்சில் கதை கேட்க ஆசை,*

*எனக்கோ அவள் பேச்சை மட்டுமே கேட்க ஆசை—என் வீட்டு குழந்தை.*

***ஆசிரியர்***

*காப்புரிமை பெறாத கருத்து குவியலே,நான் உந்தன் கருத்துக்களின் தொடர்ச்சியே.*

*1*

# *நன்றி*

*என்னுடைய முயற்சிக்கு நண்பர்கள் விதைத்த உற்சாக வார்த்தை விதைகள், இன்று கவிதைகளாக விளைந்திருக்கிறது.*

*அட்டை படம் : மதிப்பிற்குரிய திரு. **பொன்னி சரவணன்.***

*2*

# *தொலைவில் இருந்தாலும் தொடர்பில் இருக்க*

*கணினி மொழியில் நான் எழுதும் எழுத்துக்கள் தவிர்த்து, கன்னி தமிழ் மொழியில் என் எண்ணங்கள் எழுத்துக்களாக.*

*பதிவுகளுக்கு பின் தொடர ….*

*வலை பதிவு : tamilkavithaiblog.wordpress.com*

*முக நூல் பக்கம் : https://www.facebook.com/tamilhaiku/*

*தொலைவில் இருந்தாலும் தொடர்பில் இருக்க*

*மின்னஞ்சல் முகவரி: ragupathimail@gmail.com*

*வலை: www.ragupathi.in*

3

# *Free Tamil Ebooks — எங்களைப் பற்றி*

*மின்புத்தகங்களைப் படிக்க உதவும் கருவிகள்:*

*மின்புத்தகங்களைப் படிப்பதற்கென்றே கையிலேயே வைத்துக் கொள்ளக்கூடிய பல கருவிகள் தற்போது சந்தையில் வந்துவிட்டன. Kindle, Nook, Android Tablets போன்றவை இவற்றில் பெரும்பங்கு வகிக்கின்றன. இத்தகைய கருவிகளின் மதிப்பு தற்போது 4000 முதல் 6000 ரூபாய் வரை குறைந்துள்ளன. எனவே பெரும்பான்மையான மக்கள் தற்போது இதனை வாங்கி வருகின்றனர்.*

*ஆங்கிலத்திலுள்ள மின்புத்தகங்கள்:*

*ஆங்கிலத்தில் லட்சக்கணக்கான மின்புத்தகங்கள் தற்போது கிடைக்கப் பெறுகின்றன. அவை PDF, EPUB, MOBI, AZW3. போன்ற வடிவங்களில் இருப்பதால், அவற்றை மேற்கூறிய கருவிகளைக் கொண்டு நாம் படித்துவிடலாம்.*

*தமிழிலுள்ள மின்புத்தகங்கள்:*

*தமிழில் சமீபத்திய புத்தகங்களெல்லாம் நமக்கு மின்புத்தகங்களாக கிடைக்கப்பெறுவதில்லை. ProjectMadurai.com எனும் குழு தமிழில் மின்புத்தகங்களை வெளியிடுவதற்கான ஓர் உன்னத சேவையில் ஈடுபட்டுள்ளது. இந்தக் குழு இதுவரை வழங்கியுள்ள தமிழ் மின்புத்தகங்கள் அனைத்தும் PublicDomain-ல் உள்ளன. ஆனால் இவை மிகவும் பழைய புத்தகங்கள்.*

*சமீபத்திய புத்தகங்கள் ஏதும் இங்கு கிடைக்கப்பெறுவதில்லை.*

*எனவே ஒரு தமிழ் வாசகர் மேற்கூறிய "மின்புத்தகங்களைப் படிக்க உதவும் கருவிகளை" வாங்கும்போது, அவரால் எந்த ஒரு தமிழ் புத்தகத்தையும் இலவசமாகப் பெற முடியாது.*

*சமீபத்திய புத்தகங்களை தமிழில் பெறுவது எப்படி?*

*சமீபகாலமாக பல்வேறு எழுத்தாளர்களும், பதிவர்களும், சமீபத்திய நிகழ்வுகளைப் பற்றிய விவரங்களைத் தமிழில் எழுதத் தொடங்கியுள்ளனர். அவை இலக்கியம், விளையாட்டு, கலாச்சாரம், உணவு, சினிமா, அரசியல், புகைப்படக்கலை, வணிகம்*

*மற்றும் தகவல் தொழில்நுட்பம் போன்ற பல்வேறு தலைப்புகளின் கீழ் அமைகின்றன.*

*நாம் அவற்றையெல்லாம் ஒன்றாகச் சேர்த்து தமிழ் மின்புத்தகங்களை உருவாக்க உள்ளோம்.*

*அவ்வாறு உருவாக்கப்பட்ட மின்புத்தகங்கள் Creative Commons எனும் உரிமத்தின் கீழ் வெளியிடப்படும். இவ்வாறு வெளியிடுவதன் மூலம் அந்தப் புத்தகத்தை எழுதிய மூல ஆசிரியருக்கான உரிமைகள் சட்டரீதியாகப் பாதுகாக்கப்படுகின்றன. அதே நேரத்தில் அந்த மின்புத்தகங்களை யார் வேண்டுமானாலும், யாருக்கு வேண்டுமானாலும், இலவசமாக வழங்கலாம்.*

*எனவே தமிழ் படிக்கும் வாசகர்கள் ஆயிரக்கணக்கில் சமீபத்திய தமிழ் மின்புத்தகங்களை இலவசமாகவே பெற்றுக் கொள்ள முடியும்.*

*தமிழிலிருக்கும் எந்த வலைப்பதிவிலிருந்து வேண்டுமானாலும் பதிவுகளை எடுக்கலாமா?*

*கூடாது.*

*ஒவ்வொரு வலைப்பதிவும் அதற்கென்றே ஒருசில அனுமதிகளைப் பெற்றிருக்கும். ஒரு வலைப்பதிவின் ஆசிரியர் அவரது பதிப்புகளை "யார் வேண்டுமானாலும் பயன்படுத்தலாம்" என்று குறிப்பிட்டிருந்தால் மட்டுமே அதனை நாம் பயன்படுத்த முடியும்.*

*அதாவது "Creative Commons" எனும் உரிமத்தின் கீழ் வரும் பதிப்புகளை மட்டுமே நாம் பயன்படுத்த முடியும்.*

*அப்படி இல்லாமல் "All Rights Reserved" எனும் உரிமத்தின் கீழ் இருக்கும் பதிப்புகளை நம்மால் பயன்படுத்த முடியாது.*

*வேண்டுமானால் "All Rights Reserved" என்று விளங்கும் வலைப்பதிவுகளைக் கொண்டிருக்கும் ஆசிரியருக்கு அவரது பதிப்புகளை "Creative Commons" உரிமத்தின் கீழ் வெளியிடக்கோரி நாம் நமது வேண்டுகோளைத் தெரிவிக்கலாம். மேலும் அவரது படைப்புகள் அனைத்தும் அவருடைய பெயரின் கீழே தான் வெளியிடப்படும் எனும் உறுதியையும் நாம் அளிக்க வேண்டும்.*

*பொதுவாக புதுப்புது பதிவுகளை உருவாக்குவோருக்கு அவர்களது பதிவுகள் நிறைய வாசகர்களைச் சென்றடைய வேண்டும் என்ற எண்ணம் இருக்கும். நாம் அவர்களது படைப்புகளை எடுத்து இலவச மின்புத்தகங்களாக வழங்குவதற்கு நமக்கு அவர்கள் அனுமதியளித்தால், உண்மையாகவே அவர்களது படைப்புகள் பெரும்பான்மையான மக்களைச் சென்றடையும். வாசகர்களுக்கும் நிறைய புத்தகங்கள் படிப்பதற்குக் கிடைக்கும்*

வாசகர்கள் ஆசிரியர்களின் வலைப்பதிவு முகவரிகளில் கூட அவர்களுடைய படைப்புகளை தேடிக் கண்டுபிடித்து படிக்கலாம். ஆனால் நாங்கள் வாசகர்களின் சிரமத்தைக் குறைக்கும் வண்ணம் ஆசிரியர்களின் சிதறிய வலைப்பதிவுகளை ஒன்றாக இணைத்து ஒரு முழு மின்புத்தகங்களாக உருவாக்கும் வேலையைச் செய்கிறோம். மேலும் அவ்வாறு உருவாக்கப்பட்ட புத்தகங்களை "மின்புத்தகங்களைப் படிக்க உதவும் கருவிகள்"-க்கு ஏற்ற வண்ணம் வடிவமைக்கும் வேலையையும் செய்கிறோம்.

FreeTamilEbooks.com

இந்த வலைத்தளத்தில்தான் பின்வரும் வடிவமைப்பில் மின்புத்தகங்கள் காணப்படும்.

PDF for desktop, PDF for 6" devices, EPUB, AZW3, ODT

இந்த வலைதளத்திலிருந்து யார் வேண்டுமானாலும் மின்புத்தகங்களை இலவசமாகப் பதிவிறக்கம்(download) செய்து கொள்ளலாம்.

அவ்வாறு பதிவிறக்கம்(download) செய்யப்பட்ட புத்தகங்களை யாருக்கு வேண்டுமானாலும் இலவசமாக வழங்கலாம்.

இதில் நீங்கள் பங்களிக்க விரும்புகிறீர்களா?

நீங்கள் செய்யவேண்டியதெல்லாம் தமிழில் எழுதப்பட்டிருக்கும் வலைப்பதிவுகளிலிருந்து பதிவுகளை
எடுத்து, அவற்றை LibreOffice/MS Office போன்ற wordprocessor-ல் போட்டு ஓர் எளிய மின்புத்தகமாக மாற்றி எங்களுக்கு அனுப்பவும்.

அவ்வளவுதான்!

மேலும் சில பங்களிப்புகள் பின்வருமாறு:
1.ஒருசில பதிவர்கள்/எழுத்தாளர்களுக்கு அவர்களது படைப்புகளை "Creative Commons" உரிமத்தின்கீழ் வெளியிடக்கோரி மின்னஞ்சல் அனுப்புதல்
2.தன்னார்வலர்களால் அனுப்பப்பட்ட மின்புத்தகங்களின் உரிமைகளையும் தரத்தையும் பரிசோதித்தல்
3.சோதனைகள் முடிந்து அனுமதி வழங்கப்பட்ட தரமான மின்புத்தகங்களை நமது வலைதளத்தில் பதிவேற்றம் செய்தல்

விருப்பமுள்ளவர்கள் freetamilebooksteam@gmail.com எனும் முகவரிக்கு மின்னஞ்சல் அனுப்பவும்.

இந்தத் திட்டத்தின் மூலம் பணம் சம்பாதிப்பவர்கள் யார்?

யாருமில்லை.

*இந்த வலைத்தளம் முழுக்க முழுக்க தன்னார்வலர்களால் செயல்படுகின்ற ஒரு வலைத்தளம் ஆகும். இதன் ஒரே நோக்கம் என்னவெனில் தமிழில் நிறைய மின்புத்தகங்களை உருவாக்குவதும், அவற்றை இலவசமாக பயனர்களுக்கு வழங்குவதுமே ஆகும்.*

*மேலும் இவ்வாறு உருவாக்கப்பட்ட மின்புத்தகங்கள், ebook reader ஏற்றுக்கொள்ளும் வடிவமைப்பில் அமையும்.*

*இத்திட்டத்தால் பதிப்புகளை எழுதிக்கொடுக்கும் ஆசிரியர்/பதிவருக்கு என்ன லாபம்?*

*ஆசிரியர்/பதிவர்கள் இத்திட்டத்தின் மூலம் எந்தவிதமான தொகையும் பெறப்போவதில்லை. ஏனெனில், அவர்கள் புதிதாக இதற்கென்று எந்தஒரு பதிவையும்  எழுதித்தரப்போவதில்லை.*

*ஏற்கனவே அவர்கள் எழுதி வெளியிட்டிருக்கும் பதிவுகளை எடுத்துத்தான் நாம் மின்புத்தகமாக வெளியிடப்போகிறோம்.*

*அதாவது அவரவர்களின் வலைதளத்தில் இந்தப் பதிவுகள் அனைத்தும் இலவசமாகவே கிடைக்கப்பெற்றாலும், அவற்றையெல்லாம் ஒன்றாகத் தொகுத்து ebook reader போன்ற கருவிகளில் படிக்கும் விதத்தில் மாற்றித் தரும் வேலையை இந்தத் திட்டம் செய்கிறது.*

*தற்போது மக்கள் பெரிய அளவில் tablets மற்றும் ebook readers போன்ற கருவிகளை நாடிச் செல்வதால் அவர்களை நெருங்குவதற்கு இது ஒரு நல்ல வாய்ப்பாக அமையும்.*

*நகல் எடுப்பதை அனுமதிக்கும் வலைதளங்கள் ஏதேனும் தமிழில் உள்ளதா?*

*உள்ளது.*

*பின்வரும் தமிழில் உள்ள வலைதளங்கள் நகல் எடுப்பதினை அனுமதிக்கின்றன.*

1. ***www.vinavu.com***
2. ***www.badriseshadri.in***
3. ***http://maattru.com***
4. ***kaniyam.com***
5. ***blog.ravidreams.net***

*எவ்வாறு ஓர் எழுத்தாளரிடம் Creative Commons உரிமத்தின் கீழ் அவரது படைப்புகளை வெளியிடுமாறு கூறுவது?*

இதற்கு பின்வருமாறு ஒரு மின்னஞ்சலை அனுப்ப வேண்டும்.

<துவக்கம்>

உங்களது வலைத்தளம் அருமை [வலைதளத்தின் பெயர்].

தற்போது படிப்பதற்கு உபயோகப்படும் கருவிகளாக Mobiles மற்றும் பல்வேறு கையிருப்புக் கருவிகளின் எண்ணிக்கை அதிகரித்து வந்துள்ளது.

இந்நிலையில் நாங்கள் http://www.FreeTamilEbooks.com எனும் வலைதளத்தில், பல்வேறு தமிழ் மின்புத்தகங்களை வெவ்வேறு துறைகளின் கீழ் சேகரிப்பதற்கான ஒரு புதிய திட்டத்தில் ஈடுபட்டுள்ளோம்.

இங்கு சேகரிக்கப்படும் மின்புத்தகங்கள் பல்வேறு கணிணிக் கருவிகளான Desktop,ebook readers like kindl, nook, mobiles, tablets with android, iOS போன்றவற்றில் படிக்கும் வண்ணம் அமையும். அதாவது இத்தகைய கருவிகள் support செய்யும் odt, pdf, ebub, azw போன்ற வடிவமைப்பில் புத்தகங்கள் அமையும்.

இதற்காக நாங்கள் உங்களது வலைதளத்திலிருந்து பதிவுகளை பெற விரும்புகிறோம். இதன் மூலம் உங்களது பதிவுகள் உலகளவில் இருக்கும் வாசகர்களின் கருவிகளை நேரடியாகச் சென்றடையும்.

எனவே உங்களது வலைதளத்திலிருந்து பதிவுகளை பிரதியெடுப்பதற்கும் அவற்றை மின்புத்தகங்களாக மாற்றுவதற்கும் உங்களது அனுமதியை வேண்டுகிறோம்.

இவ்வாறு உருவாக்கப்பட்ட மின்புத்தகங்களில் கண்டிப்பாக ஆசிரியராக உங்களின் பெயரும் மற்றும் உங்களது வலைதள முகவரியும் இடம்பெறும். மேலும் இவை "Creative Commons" உரிமத்தின் கீழ் மட்டும்தான் வெளியிடப்படும் எனும் உறுதியையும் அளிக்கிறோம்.

http://creativecommons.org/licenses/

நீங்கள் எங்களை பின்வரும் முகவரிகளில் தொடர்பு கொள்ளலாம்.

e-mail : freetamilebooksteam@gmail.com
FB : https://www.facebook.com/FreeTamilEbooks

G +: https://plus.google.com/communities/108817760492177970948

நன்றி.

# உங்கள் படைப்புகளை வெளியிடலாமே

## உங்கள் படைப்புகளை வெளியிடலாமே

உங்கள் படைப்புகளை மின்னூலாக வெளியிடலாம்.

1. எங்கள் திட்டம் பற்றி — http://freetamilebooks.com/about-the-project/

தமிழில் காணொளி — http://www.youtube.com/watch?v=Mu_OVA4qY8I

2. படைப்புகளை யாவரும் பகிரும் உரிமை தரும் கிரியேட்டிவ் காமன்ஸ் உரிமம் பற்றி —

http://www.wired.co.uk/news/archive/2011-12/13/creative-commons-101

https://learn.canvas.net/courses/4/wiki/creative-commons-licenses

உங்கள் விருப்பான கிரியேட்டிவ் காமன்ஸ் உரிமத்தை இங்கே தேர்ந்தெடுக்கலாம்.

http://creativecommons.org/choose/

3.

மேற்கண்டவற்றை பார்த்த / படித்த பின், உங்கள் படைப்புகளை மின்னூலாக மாற்ற
பின்வரும் தகவல்களை எங்களுக்கு அனுப்பவும்.

1. நூலின் பெயர்
2. நூல் அறிமுக உரை
3. நூல் ஆசிரியர் அறிமுக உரை
4. உங்கள் விருப்பான கிரியேட்டிவ் காமன்ஸ் உரிமம்
5. நூல் — text / html / LibreOffice odt/ MS office doc வடிவங்களில். அல்லது வலைப்பதிவு / இணைய தளங்களில் உள்ள கட்டுரைகளில் தொடுப்புகள் (url)

இவற்றை freetamilebooksteam@gmail.com க்கு மின்னஞ்சல் அனுப்பவும்.

விரைவில் மின்னூல் உருவாக்கி வெளியிடுவோம்.

————————————————————————————————————

நீங்களும் மின்னூல் உருவாக்கிட உதவலாம்.

மின்னூல் எப்படி உருவாக்குகிறோம்? —

தமிழில் காணொளி — https://www.youtube.com/watch?v=bXNBwGUDhRs

இதன் உரை வடிவம் ஆங்கிலத்தில் — http://bit.ly/create-ebook

எங்கள் மின்னஞ்சல் குழுவில் இணைந்து உதவலாம்.
https://groups.google.com/forum/#!forum/freetamilebooks

நன்றி !